Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 357

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர். மஹாவித்வான்.

# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. 25

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

பிங்கள ஹூ மாசி மீ 1978 மார்ச் மீ

# திருமங்கையாழ்வார் திருநாங்கூர்த் திருப்பதிகள் மங்களாசாசனம்

அணிபொழில் திருவரங்கத்தம்மானின் உலகமளந்த பொன்னடியே அடைந்துய்ந்த ஆடல்மா வலவன், கொடிமாடமங்கையர் கோனை திருமங்கை ஆழ்வார் ஸ்ரீரங்கத்தில் விபவத்தில் அத்யயனோத்ஸவம் நடத்திவைத்து உத்ஸவம் பூர்த்தியானவாறே தமதிருப்பிடம் எழுந்தருளுங் காலையில் விசேஷித்துகந்து மங்களாசாஸனம் செய்தருளிய திருநாங்கூர்த் திருப்பதிகளை அர்ச்சையிலும் விடாதேமங்களாசாஸனம் செய்யும் உத்ஸவம் எம்பெருமானார் திருவவதார வருஷமாகிய இப் பிங்கள வருஷத்தில் தை மீ 25, 26, 27 தேதிகளில் வெகு விமரிசையாக நடைபெற்றது.

தைமீ 25 ஆம் தேதி அமாவாசையன்று திருநகரியிலிருந்து திருக்குறையலூர் திருமங்கை மடம், திருக்காவளம்பாடி, திருமணிக் கூடம், திருப்பார்த்தன் பள்ளி எம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்தருளி, காவிரிக்கரையில், மஞ்சள்குளி மண்டபத்தில் திருவரங்கத் தெம்பெருமான், திருநறையூர் எம்பெருமான் மாலை பரிவட்ட மரியாதைகளைப் பெற்றுக்கொண்டு திருமஞ்சனம் கண்டருளினார். அன்றிரவே திருநாங்கூரில் மணிமாடக்கோயில், வண்புருடோத்தமம், வைகுந்த விண்ணகரம், செம்பொன் செய்கோயில், திருத் தெற்றியம்பலம், அரிமேய விண்ணகரத் தெம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்து மீண்டும் மணிமடாக் கோயிலுக் கெழுந்தருளினார்.

தைமீ 26 ஆம் தேதியன்று புதன்கிழமை நாங்கைத் திருப்பதி பதினொரு எம்பெருமான்களையும் ஒருங்கேஒரேபந்தலில்லுரோர் பாசுரம் ஸேவித்து மங்களாசாஸனம் செய்தருளி மாலை, ஸ்ரீசடகோப மரியாதைகளைப் பெற்றுக் கொண்டு, ஆழ்வார், ஸ்ரீமணவாள மாமுனிகளுக்கு மாலை ஸ்ரீராமாநுஜ மரியாதைகளை அருளினார். அப்போது ஆழ்வார் வடிவழகு சூர்ணிகை ஸேவித்தது மிகவும் செவிக்கின்பமாயிருந்தது. அன்றிரவு பதினொரு எம்பெருமான்கள் கருடவாஹனங்களிலும் ஆழ்வார் ஹம்ஸவாஹனத்திலும் இவர்களை எதிர்நோக்கி எம்பெருமானார் புனரவதாரமான ஸ்ரீமந்மணவாள மாமுனிகள் முதன் முறையாக இப்பிங்கள வருஷத்தில் சேஷ வாஹநத்தில் எதிர்ஸேவையுடனும் வர்ணிக்க முடியுமோ என்றவாறிருந்தது. திருவீதியில் திருநாங்கூர்த் திருப்பதிகள் விஷயமான 110 பாசுரங்களும் ஸேவித்து சாற்று முறையாயிற்று.

மறுநாள் தைமீ 27ம் தேதியன்று திருநாங்கூரில் ஸ்ரீஆழ்வார் திருமஞ்சனம் கண்டருளி திருப்பாவை சாற்றுமுறை ஆனபிறகு, திருவெள்ளக்குளம், திருத் தேவனார் தொகை திவ்ய தேசங்களை மங்களாசாஸனம் செய்துகொண்டு திருவாலிக் கெழுந்தருளினார். திருவாலியில் ஆலிநகர்க்கதிபதியே, என்று ஸ்ரீகுலசேகராழ்வார் மங்களாசாஸனம் செய்தபடி எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்மப் பெருமாளுக்குக் கருடஸேவை ஆழ்வார்திருமுன்பு நடைபெற்று ஆழ்வாருக்கு மாலை பரிவட்டமரியாதைகள் அளிக்கப்பட்டன. திருப்பல்லாண்டு, கண்ணிநுண்சிறுத்தாம்பு, வாடினேன்வாடி, திருவாலிவிஷயமான முப்பது பாசுரங்களும் இந்த எம்பெருமான் சந்நிதியில் ஸேவிக்கப்பெற்றுதிருநகரியில் ஸ்ரீவயலாலி மணவாளன் கருடஸேவையுடன் இந்த மங்களாசாஸனஉத்ஸவம் பூர்த்தியாயிற்று. இக்கட்டுரை யனுப்பினவர்.

—T. S. திருமலாசாரியார்.

# ஸ்ரீ ராமாநுஜன் 357

ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
மஹாவித்வான் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி

| தொகுதி 30 | பிங்களஹூ மாசிமீ<br>10—3—1978 | பகுதி—9 |
|---|---|---|


## நருஸிம்ஹப்ரியா நிரீக்ஷணம்.

ஸ்ரீமதஹோபில மடத்துப் பத்ரிகையான ஸ்ரீநருஸிம்ஹப்ரியாவின் மாசிமாதஸஞ்சிகையை ஸேவிக்கப்பெற்ற ஆனந்தத்தை முந்துற முன்னம் விஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமதழகிய சிங்கரின் அருள் மொழியான—திருப்பாவை இரண்டாம்பாசுர வியாக்கியானத்தை [ஏழுபக்கங்களையும்] பூர்த்தியாக ஸேவித்துத் தொல்லையின்பத் திறுதிகண்டேன். சென்ற தைமாதப்பத்ரிகையில் வெளி



வந்திருந்த திருப்பாவை முதற்பாசுர வியாக்கியானத்தை ஸேவித்தபோது இவ்வண்ணமாகவே திருப்பாவை முழுமைக்கும்ஸ்வாமியின் வியாக்யானம் அவதரிக்க வேணுமென்கிற அடியேனுடைய ஆசம்ஸையை ஸ்ரீராமாநுஜனில் வெளியிட்டும், விஜ்ஞாபன பத்ரமூலமாகத் தெரிவித்தும், பழைய சீவரம் மலையில் ஸ்ரீநருஸிம்ஹன் ஸன்னிதி ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவத்தில் தண்டன் ஸமர்ப்பிக்கப்ராப்தமான போது நேரில் திருவடிவாரத்தில் பிரார்த்தித்து மிருந்தேன். அப்போது அவ்விடத்தில் அடியேனுடைய உபந்யாஸமென்னும் புன்மொழிகளைத் திருச்செவிசாத்தி உகந்தருளி ஸ்ரீஸ்வாமி ஆனந்தபரீவாஹமான அபிநந்தன ஸ்ரீஸூக்திகளை யருளிச் செய்தான பிறகு ஸ்வாமி தாம் *ஓங்கியுலகளந்த பாசுரத்திற்கு அருளியிருந்த வியாக்கியானத்தைச் சிறிது எடுத்துரைத்

தருள, அனைவருங்கேட்டு அதிமாத்ரம் ஸந்தோஷிக்கும் படியாயிருந்தது. அதன்பிறகு பத்திரிகையில் *வையத்து வாழ்வீர்காள் பாசுரத்தின் விபுலவியாக்கியானத்தைச் சில ரஸிகவித்வன் மணிகளோடு கூடி ஸேவித்து மிக்க மகிழ்வெய்தினேம், மேன்மேல் வெளிவரும் ஸஞ்சிகைகளையும் மிக்க குதூஹலத்தோடு நிரீக்ஷிக்கும் படியாக வுள்ளது. இந்த வியாக்கியானம் முற்றும் முடிவுபெற்ற பிறகு தனிப்புத்தமாகவும் பதிப்பித்தால் பலர் சுவையமுதம் பருகலாமென்பது அடியேனுடைய எண்ணம் மட்டுமன்று. ... *

# விவக்ஷிதம் ஹி அநுக்தம் ஆதுலீகரோதி ஸ்ருதயம்

ந்ருஸிம்ஹப்ரியாவில் சில மாதங்களாய் "இஞ்சிமேடு ஸ்ரீமதழகிய சிங்கரின் வைபவம்" என்னும் மகுடம் புனைந்த கட்டுரையொன்று வெளிவந்துகொண்டிருக்கின்றது. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. இஞ்சிமேட்டழகிய சிங்கரைப் பூர்வாச்ரமத்திலும் உத்தமாச்ரமத்திலும் வாசியற வணங்கிவழிபட்டவன் தென்கலையாரில் அடியேனொருவனே யென்பதை உள்ளங்குளிர வுரைக்கின்றேன். அன்றியும், பூர்வாச்ரமத்தில் அந்த ஸ்வாமியோடு அதிகமாகப் பழகினவர்களில் அடியேனொருவனே தற்காலம் ஜீவித்திருக்கின்றேனென்பதைத் திடமாகச் சொல்லத் துணிவுடையேன். அடியேனிருப்பது தென்னண்டை மாடவீதியில்; அந்த வீதியிலேயே ஸந்நிஹிதமான திருமாளிகையிலே ஸ்ரீஸ்வாமி பலவாண்டு எழுந்தருளியிருந்தபடி. சென்னை ஹை கோர்ட் ஜட்ஜாயும், பிறகு பெடரல் கோர்ட் ஜட்ஜாயுமிருந்த—ஜகத்ப்ரஸித்தரான ஸ்ரீ உ. வே. ஸர். எஸ். வரதாசாரியர் ஸ்வாமி அடிக்கடி ஸ்ரீகாஞ்சிக்குவந்து ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியிலே வேதாந்தச்ரவணம் பண்ணுவர்; அந்தஸமயங்களில் அடியேனும் பெரும்பாலும் உடனிருந்ததுண்டு. ஸ்ரீஸ்வாமியின் ஜாமாதா நல்ல வேதாத்யயந சீலர்; அவரோடு க்ரமசர்ச்சை சொல்லுவதற்காகவும் அடியேன் அடிக்கடி ஸ்வாமி திருமாளிகைக்கு விடைகொள்வதுண்டு. இப்படியாகத் தெரிவிக்கக்கூடிய பழங்கதைகள் ஒன்றிரண்டல்ல; பலபலவுண்டு; அக்காலத்தில் அடியேன் முப்பது பிராயத்தவன்; நாடோறும் ப்ரபாதகாலத்தில் வெள்ளக்குளம் செல்வதும் இருவருங்கூடியே என்பதைப் பன்முறையும் எழுதியிருக்கிறேன். ஸ்ரீஸ்வாமியின் திருத்தேவியார்க்கும் அடியேன் தாயார் தமக்கைகளுக்கும் பரஸ்பரம் அதிகமான நட்பு இருந்தபடியால் அதனாலும் ஸ்ரீஸ்வாமி உத்தமாச்ரமத்திலுங் கூட அடியேனைக் கடாக்ஷிக்க நேரும்போதெல்லாம் 'அலமேலம்மா ஸௌக்கியமா? கனகம் ஸௌக்கியமா?' என்று உகந்து கேட்டருள்வர். (அடியேன் தாயாரின் பெயர்-அலமேலம்மா; தமக்கையின் பெயர்-கனகம்.) இதெல்லா மிப்போது எதற்காக எழுதுவது? ஸ்ரீஸ்வாமியின் வைபவங்களை யார் எவ்வளவெழுதினாலும் அதில் அடியேன் உகப்புடையவனேயன்றி, இறையும் மாச்சரியமுடையேனல்லேனென்பதை உலகுக்கு அறிவிக்கவேண்டியே. அஸ்மதாசார்யரான ஜகத்குரு ஸ்ரீகாதிஸ்வாமி திருமாளிகையில் ஐந்துநாள் நடந்த சாஸ்த்ரார்த்த ஸதஸ்ஸில் ஸ்ரீஸ்வாமிபெருமைபெற்ற வரலாற்றை அடியேன் பன்முறையும் எழுதிவெளியிட்டுள்ளேன். ப்ரக்ருதம் ந்ருஸிம்ஹ ப்ரியாவில் ஸ்ரீஸ்வாமியின் வைபவத்தை யெழுதுமவர் இன்னாரென்று தெரியவில்லை. தெரிந்து என்னாகவேணுமென்று கேட்பீர்கள். எழுதிப்போருகிற கதைகளைக் காணும்போது அந்த லேககர் எனக்கு ஸமாநவயஸ்கராகவோ என்னைவிட அதிகவயஸ்கராகவோ இருக்கவேணும், அதவா, யாரேனுமொரு

வர் எழுதிவைத்திருந்த கதைகளை வெளியிடுபவராகவாவது இருக்கவேண்டும். ப்ரக்ருத ஸஞ்சிகையில் பக்கம் 20ல் "திருநாங்கூரில் வாக்யார்த்தம் செய்தது" எனமகுடமிட்டு எழுதியுள்ள கதை உண்மைக்கு மிகவும் மாருக எழுதப்பட்டுள்ளது. சென்ற தை மாதத்தில் 6-2-78 திங்கட் கிழமை பிற்பகலில் (சென்னை) மாம்பலத்தில் ஸ்ரீமதஹோ



பிலமடம் ஓரியண்டல் ஹைஸ்கூலில் ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கர்ஸ்வாமியின் சதாப்தீமஹோத்ஸவக் கொண்டாட்டத்திற்காகக் கூடின மஹாஸபையில் ஸ்ரீஸ்வாமியின் வைபவோபந்யாஸத்திற்கென்றே அன்புடன் அழைக்கப்பட்டுச் சென்றிருந்த அடியேன் ஆயிரவர் கூடிய அந்தப்பெருங்கூட்டத்தில் ஸ்ரீஸ்வாமியின் வைபவத்தை உபந்யஸிக்கத் தொடங்கி முதன் முதலாகத் திருநாங்கூர் நிகழ்ச்சியைப் பற்றியே பரக்கப் பேசினேன். அங்குக் கேட்டு மறந்தவர்களுக்கும் கேட்கப்பெருதவர்களுக்குமாக இங்கு விவரித்தெழுதுகின்றேன்–இங்குக்காணும் படத்தில் என்பக்கத்தில் வீற்றிருப்பவர் (1)உயர்பதவிவாழும் தமிழ்நாட்டு கவர்னரவர்கள். (2)ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. லோகவிக்க்யாதவைபவ சாலியான். த்ரிதண்டி.ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி. [அங்குநான்பேசினதைச் சுருக்கமாக எழுதுகிறேன்.]திருநாங்கூர் வரலாறு ; ஜகத்குரு ஸ்ரீகாதிஸ்வாமி (பிரதிவாதி பயங்கரம் அனந்தாசாரியர் ஸ்வாமி, மார்வாடத்தில் ரோல் என்னுமூரில் சிஷ்யர்களின் பிரார்த்தனையினுல் ஸ்ரீரங்கநாதன் ஸன்னிதியொன்று நிர்மாணம் செய்வித்தார். [அதன் உபக்ரமம்–சென்ற விச்வாவஸுவருஷத்திற்கு முந்தின விச்வாவஸுவருஷத்தில்.]கீலகவருஷ சித்திரை25உ அந்த ஸன்னிதிக்குத் திருப்ரதிஷ்டை நடைபெற்றது. ஷஸன்னிதி நிர்மாணமாய்க் கொண்டிருக்கையில் ஸ்ரீகாதிஸ்வாமிக்கு ஓர் அபிஸந்தி தோன்றியது– ஏதேனுமொரு திவ்யதேசத் தெம்பெருமானுடைய அபிமானத்தை அந்தஸன்னிதிக்குப் பெறுவிக்க வேணுமென்று பதினெரு

திவ்யதேசங்கள் புடைசூழ்ந்த திருநாங்கூரில் ஏழுதிவ்ய தேசங்கள் ப்ரதிவாதி பயங்கரவம்சஸ்தர்களின் ஆதீனத்தைச் சார்ந்தவையாதலால் அவற்றுள் ஒன்ருன வண்புருடோத்தமத்தில் பஞ்சபேரங்களுள் ஒரு திருமூர்த்தியை எழுந்தருளப் பண்ணிக் கொடுக்க அதிகாரிகளின் இசைவு பெறுவதற்காக ஸ்ரீகாதி ஸ்வாமி திருநாங்கூருக்குத் தையமாவாஸ்யை யுத்ஸவ ஸந்தர்ப்பத்தில் எழுந்தருளநேர்ந்தது. (அது பராபவ வருஷம்.) அப்போது அடியேனும் உடன் விடைகொள்ள ப்ராப்தமாயிற்று. வருஷம் மாஸம் திதி நக்ஷத்ரமுட்பட எல்லாம் ரோல்ஸன்னிதியில் சிலாலிகிதமாயிருப்பதாலும், அதுவும் ஹிந்தியில் அச்சேறியிருப்பதாலும் இங்குநாம் செய்யும் காலக்குறிப்புகள் மனம் போனபடி செய்யுமவையல்ல, நிற்க. பராபவளு தையமாவாஸ்யைக்கே நாம் திருநாங்கூர் பதினொரு கருடஸேவை ஸேவிக்கப்போனது. அப்போதே அங்கு ஸ்ரீமது பயவே. ஸ்ரீமுஷ்ணம் ஸ்வர்ணம் கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியும் இஞ்சிமேடு ரங்கநாதாசார்ய ஸ்வாமியும் மஹோத்ஸவ ஸேவார்த்தமாக எழுந்தருளினது. இஞ்சிமேடு ஸ்வாமியும் காதிஸ்வாமியும் திருப்பதியில் வித்வத் ஸார்வபௌமரா யெழுந்தருளியிருந்த புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமிஸன்னிதியில் ஸப்ரஹ்மசாரிகளாயிருந்தவர்களாதலால் அங்கு பரஸ்பரம் பரிமாறிக் கொண்டவகைகள் வாசாமகோசரம். நிற்க.

அப்போது திருநாங்கூரில் ஏதோ நிகழ்ந்ததாக ந்ருஸிம்ஹப்ரியாவில் எழுதியிருப்பது என்ன வென்ருல்—"அங்கு பண்டிதபூயிஷ்டமான திருவோலக்கத்தில் சிஷ்யர்களோடு வந்திருந்த ஸ்ரீபெரும்பூதூர் குண்டலம் மஹாவித்வான் நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி ப்ரஸக்தாநுப்ரஸக்தமாக* யேந யேந தாதா கச்சதி தேந தேந ஸகச்சதி* என்கிற ச்ருதிக்கு விரஸமாகச் சொன்ன அர்த்தங்களையெல்லாம் நிராஸம் பண்ணி, அதற்கு ஸரஸமான அர்த்தத்தைப் பண்டித ஹ்ருதயங்கமமாகப் பரக்கப் பேசி, பண்டிதர்களனைவராலும் புகழப்பெற்ருர் (இஞ்சிமேட்டு ஸ்வாமி)" என்றெழுதப்பட்டுள்ளது. இது எப்படியிருக்கிறதென்ருல், "ஸ்ரீராமன் தசரதசக்ரவர்த்தியோடு கூட த்வாரகைக்கு வந்து அங்கு கோவர்த்தநோத்தரணம் பண்ணிக் கன்றுகளை மேய்த்துக் கொண்டிருந்தான்" என்னுமாபோலே யிருந்தது. ஸ்ரீமத் குண்டலம் ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூருக்கெழுந்தருளியான பிறகு எந்த திவ்ய தேசத்துக்கும் எழுந்தருளினதில்லை யென்பது ஜகத்ப்ரஸித்தம். மேலும், அந்த ஸமயத்தில் அந்த ஸ்வாமியின் சிறுகுமாரனொருவன் ஸ்ரீபெரும்பூதூர்ப் புஷ்கரிணியில் சறுக்கி விழுந்து ஆசார்யன் திருவடி சேர்ந்த செய்தியும், அதனுல் அந்தஸ்வாமி சோகாக்ராந்தராயெழுந்தருளியிருக்கிறபடியும் எங்கும் பரவியிருந்தது. அந்த மஹாஸ்வாமியைப்பற்றி இங்கு எழுதப்பட்டிருக்குங்கதைமுற்றிலும் புளுகு. அந்த ஸ்வாமி வாதங்களில் அந்வயிக்கிற வழக்கமுமில்லை. அவரிடத்தில் வாவதூக சிகாமணிகளான வித்யார்த்திகள் பதின்மர் வாழ்ந்த நல்லடிக்காலமன்றே அது. அவர்களை வாதிக்கவிட்டுத் தாம் கடாக்ஷித்துக் கொண்டிருப்பரத்தனை. இது அடியேன் ஸாக்ஷாத் பலகால் கண்டறிந்தவிஷயம். இஞ்சிமேட்டு ஸ்வாமி மஹாவாக்மியென்பதையும் எப்படிப்பட்ட வித்வானையும் வெல்லவல்லவரென்பதையும் அடியேன் அபலாபம் செய்பவனல்லேன். அடியேனறிந்தவளவு அறிந்தவர் இப்போது உபய கலையாரிலும் ஒருவருமில்லை யென்பதைத் துணிந்து சொல்லவும் வல்லேன்.

ந்ருஸிம்ஹப்ரியாவில் ஸ்ரீஸ்வாமி வைபவ மெழுதுகின்றவரை ஒன்று கேட்கிறேன்; இப்போது தேவரீருக்கு என்னவயது? திருநாங்கூருக்கு அந்தஸமயம்

தேவரீர் நேராகச் சென்றிருந்ததுண்டா? அப்போது தேவரீருக்கு என்ன பிராயம்? ஸ்ரீமத் குண்டலம் மஹா வித்வான் ஸ்வாமி விரஸமாக ஸாதித்த உபநிஷதர்த்தத்தையும், இஞ்சிமேட்டு ஸ்வாமி அதை மறுத்து ஸரஸமாக ஸாதித்து வித்வான்களை வியக்கப்பண்ணின அர்த்தத்தையும் ஒருஸதஸ்ஸில் எடுத்துக் கூறவல்லீரா? காஞ்சீபுரத்தில் சின்னிவீராதாதம் என்றொருபண்டிதர் இருந்தார், இவர் ஸ்ரீமத்திருப்புட்குழி மஹாஸ்வாமியின் திருக்குமாரர் (பட்டண்ணு ஸ்வாமி) பக்கலிலே சில நியாயக்ரந்தங்கள் வாசித்தவர். "கத்வால் ஸபைக்குப் போய்வந்தேன்; வநபர்த்தி ஸபைக்குப் போய் வந்தேன், புதுக்கோட்டை ஸதஸ்ஸுக்குப் போய்வந்தேன்" என்று சொல்லிக் கொள்வதோடு "வநபர்த்தி ஆஸ்தான வித்வான் சதுர்தசலக்ஷணியில் ஒருகோடி சொன்னான்; அதைநான் ஒரு தளம் போட்டுக் கண்டித்து விட்டேன்; அதற்குமேல் கொல்லாபூர் சாஸ்திரி ஒருகோடி சொன்னான்; அது கதாதரபட்டாசாருடைய பங்க்திக்குச் சேராதென்று உடனே கண்டித்துவிட்டேன்" என்று வாய்மூடாமல் சொல்லிக்கொண்டிருப்பர்; "அவர் சொன்ன கோடி என்ன? நீர் கண்டித்த விதம் என்ன? அதைச் சொல்லும், கேட்போம்" என்று ஒருவர் கேட்பராம்; "சொல்லமாட்டேனா? சொல்றேன்." என்பராம்; சொல்லுவதற்கு விஷயமேது? இதுவொரு விநோதவார்த்தாலாபம். அதேபோல் இவர் குண்டலம் ஸ்வாமி விரஸமாகச் சொன்ன அர்த்தங்களையெல்லாம் நம் ஸ்வாமி ஸரஸமான அர்த்தங்களைச் சொல்லிக் கண்டித்துத் துண்டித்து புண்டித்து விட்டார் என்றெழுதுகிறார். உண்மையில் ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கரின் விச்வப்ரஸித்தமான வைதுஷ்யத்தை ஸ்தாபிக்கச் சில பொய்க்கதைகளைத் தொடுக்கவேண்டிய அவசியமேயில்லை

அடுத்தபடி, "ஸ்ரீபெரும்பூதூரில் ஆஸூரி ராமாநுஜாசார்யருடன் வாக்யார்த்தம்" என்று மகுடமிட்டு ஒருபக்கம் நிரப்பியுள்ளார் லேககர். இவ்விஷயம் எனக்கு நேரில் தெரியாவிட்டாலும் ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கர் திருவாக்கிலிருந்தே இருமுறை கேட்டிருக்கிறேன். "ஒரு தைமீ குரு புஷ்யோத்ஸவத்திற்கு ஸ்ரீஸ்வர்ணம் ஸ்வாமியையும் எழுந்தருளப்பண்ணிக் கொண்டு ஸ்ரீபெரும்பூதூர் எழுந்தருளியிருந்தார்......" என்று ந்ருஸிம்ஹப்ரியாவில் காண்பது மித்த்யா. இதனால் ஸ்ரீஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூருக்கெழுந்தருளினது க்ருஹஸ்தாச்ரமத்தில்—என்று காட்டப்படுகிறது. ஆச்ரமஸ்வீகாரம் மேலே எழுதப்படுவதாலும் இது வ்யக்தம். கேண்மின், ஸ்ரீஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூருக்கெழுந்தருளி ஸ்ரீமதாஸூரி ஸ்வாமியைச் சந்தித்து வார்த்தையாடினது பட்டாபிஷிக்தரான பிறகேயன்றிப் பூர்வாச்ரமத்திலன்று. அன்று, அன்று அன்று. மடாதிபதியான பிறகுதான் அங்கு எழுந்தருளினது. அப்போது அங்கு நடந்த சாஸ்த்ரார்த்த சர்ச்சை—ஸ்ரீவைகுண்டம் ஜடமா? அஜடமா? என்பது பற்றியாம். பிள்ளைலோகாசார்ய ரருளிச்செய்த தத்வத்ரயத்தில் அசித்ப்ரகரண—உபக்ரமத்தில்-"இத்தைச் சிலர் ஜடமென்றார்கள், சிலர் அஜடமென்றார்கள்" என்றொரு சூர்ணையுள்ளது. சுத்தஸத்வமான ஸ்ரீவைகுண்டத்தைச் சிலர் ஜடமென்றும் சிலர் அஜடமென்றும் சொன்னார்கள் என்றபடி. நடாதூர்அம்மாள் அருளிச்செய்த *ஸத்ஸங்காத் இத்யாதி ச்லோகத்வயத்தில்* முக்தோர்ச்சிர்திந பூர்வபக்ஷ—இத்யாதி த்விதீய ச்லோகத்தில் "ஸ்ரீவைகுண்டமுபேத்ய நித்யம் அஜடம்" என்று நிஸ்ஸம்சயமாக அஜடமென்று ஸாதித்திருக்க,

எவனே ஒரு வழிப்போக்கன் ஜடமென்றல் அதையும் ஒருபக்ஷமாக லோகாசார்யர் எழுதிவைக்கவேணுமோ? என்று பாலவேடு. ரங்கராமாநுஜாசாரியர் ஸ்வாமி (வடகலை) வாக்கோலாஹலம் செய்து கொண்டிருந்தாராம். ஆஸூரிஸ்வாமி, "ஜடமென்று சொல்லுவது வழிப்போக்கனுடைய பக்ஷமன்று; நம்முடைய தர்சனஸ்தர்களிலேயே சிலருடைய பக்ஷமென்று ஸாதித்து, தத்வத்ரய வ்யாக்யான ஸ்ரீகோசத்தைக் கொண்டு வர நியமித்து, அதில் [மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தில்] "இந்த தர்சநஸ்தர்தங்களிலே சிலர் ஜடமென்றுர்கள்;...*இஹ ஜடாம் ஆதிமாம் கேசிதாஹு:* என்றிறே அபியுக்தரும்சொல்லிற்று." என்றுள்ள பங்க்திகளை ஆஸூரிஸ்வாமியின் சிஷ்யர்கள் வாசித்துக் காட்டினுர்களாம். (இஹ ஜடாம் ஆதிமாம் சேசிதாஹு:) என்பது தத்வமுக்தா கலாபத்தில் ஸ்வாமிதேசிகன் ஸாதித்தருளின ச்லோகம் பாலவேட்டுஸ்வாமி இதைக்கேட்ட பின்பும் ஏதோ விதண்டாவாதம் செய்யத் தொடங்கினதாகவும், அப்போது இஞ்சிமேட்டழகிய சிங்கர் மற்றும் அனேகப்ரமாண வசனங்களை ஒருபுஸ்தகமும் பாராமல் அப்போதே யெடுத்துரைத்து சுத்த ஸத்வத்தை ஜடமென்று சிலர் கொண்டிருக்கிற பக்ஷத்திலும் விசேஷபாதகம் ஒன்று மில்லையென்றும், இதில் பிணங்க வேண்டிய அவசியம் சிறிது மில்லையென்றும் பரக்க உபந்யஸித்தருளின ரென்று அக்காலத்தில் மிக ப்ரஸித்தமாயிருந்தது. இதை ஸ்ரீ ஸ்வாமி திருவாக்கில் நேராகவே கேட்டிருக்கிறேன். "ஸ்ரீபெரும்பூதூரில் மத்யஸ்தர்கள் முன்னிலையில் மூன்றுநாள் வாக்யார்த்தம் நடந்தது" என்றெல்லாம் இவர் எழுதியிருப்பது ஸர்வாத்மநா அபத்தம். அந்யத்ர எங்காவது நடந்திருக்கலாம்.

அனைவரும் பரிஹஸிக்கக்கூடியதாக இவரெழுதி யிருப்பதொன்று கேளீர்; பக்கம் 17ல் B என்று குறிப்பிட்ட முதலேட்டில்—க்ருஹஸ்தாச்ரமஸ்தரான இஞ்சி மேடு ரங்கநாதாசார்யர் ஸ்வாமி திருப்பதியில் நின்றும் ஸபார்யராய் ஸ்ரீமுஷ்ணத்திற் கெழுந்தருளி ஸ்ரீமத் ஸ்வர்ணம் ஸ்வாமி ஸந்நிதிக்குப் போய்த் தண்டன் ஸமர்ப்பித்துத் தம்முடைய வ்ருத்தாந்தத்தையும் வந்த காரணத்தையும் விஜ்ஞாபித்து *சிஷ்யஸ்தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம்* என்று ப்ரார்த்தித்தார். பிறகு அந்த ஸ்வாமியும் [இங்குத்தான் எல்லாரும் கவனிக்கவேணும் —]

> "நீர் ஸந்நிதி ஸம்ப்ரதாயஸ்தராயிற்றே. தற்காலம் ஸ்ரீஸந்நிதியில் ஸ்வாமிகள் இல்லாவிட்டாலும் சீக்கிரத்தில் ஸ்வாமிகள் எழுந்தருளினுல் என்னைவிட்டு அங்கே போகும்படி நேரிடுமே;....... ஆகையால் ஸஹஸா நீர் இந்தக் கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கவேண்டாம்; சிலகாலம் இங்கு இருந்தால் இருவருக்கும் தைரியமுண்டானுல் யோசிக்கலாம்" [ஆரியர்களே! மேல் கதைகள் இருக்கட்டும்.]

ஸ்வர்ணம் ஸ்வாமி இஞ்சிமேடு க்ருஹஸ்த ஸ்வாமியை நோக்கி "நீர் இப்போது என்னை ஆச்ரயித்து, பிறகு என்னை விட்டுவிட்டுப் போய்விட்டீரானுல் என்ன செய்வது' என்று கவலைகொண்டு பேசினதாக எழுதியிருக்கிருரே, இப்படி கூடவா ஒரு ஆசார்யவைபவம் எழுதுவது! யாரோ ஒருவர் எழுதியனுப்பினுலும் அதைத் திருத்திப் பிரசுரிக்கப் பத்ரிகாதிகாரிகளுக்கு அதிகாரமில்லையா? ஸ்வாமிகளிருவரும் மஹாஜ்ஞாநாதிகர்கள்; பரிபூர்ணுதிகாரிகள். திருவாய்மொழியில் 2–9–2 *ஞானக்கைதா காலக் கழிவு செய்யேலே* என்றவிடத்து ஈடுமுப்பத்தாருயிரத்தில்—"இங்கே எம்பார்க்கு

ஆண்டானருளிச் செய்த வார்த்தையை ஸ்மரிப்பது. அதாவது; ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கை கொடுத்தால், எடுக்குமவர்களுக்கும் எளிதாய் ஏறுமவனுக்கும் எளிதாயிருக்குமிறே. அப்படியேயாகிறது—என்று. [இது ஈட்டு ஸ்ரீஸூக்தி; எம்முடைய திவ்யார்த்த தீபிகையுரையில் இதற்கு விவரணம் காண்மின் ;– (நமது உரை)ஞானக்கை தா என்றவிடத்தில்ஈடு–''எம்பார்க்கு ஆண்டானருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது'' என்று. இதன் விவரணம் வருமாறு :— முதலியாண்டான் ஒருகால் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கையில் அவருடைய சிஷ்யரான வொரு ஸ்ரீவைஷ்ணவர், கோயிலிலே வந்து, எம்பார் ஸந்நிதியிலே கைங்கர்யம் பண்ணிக் கொண்டிருந்தார். அப்போது ஒருநாள் சில ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எம்பார் திருவிலச்சினை ஸாதிக்கவிருக்கையில், இந்த ஸ்ரீவைஷ்ணவரும் தமக்கும் ஸாதிக்கும்படி வேண்டினார்; அப்போது எம்பார் 'உமக்கு விசேஷ ஸம்பந்தமுண்டோ? என்று அவரைக் கேட்க, 'தேவரீருடைய ஸம்பந்தமே ஸர்பந்தம்' என்று அவர் விண்ணப்பஞ்செய்ய' அவ்வளவிலே எம்பார் 'இவர் முதலியாண்டானுடைய ஸ்ரீபாதத்தவர்' என்றறியாதே இவர்க்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப்பண்ணி இவரைக்கொண்டு கைங்கரியங்களுங் கொண்டெழுந்தருளி யிராநிற்கையில் ஆண்டானும் திரும்பிக் கோயிலிலே யெழுந்தருள, அப்போது அந்த ஸ்ரீவைஷ்ணவர் ஆண்டானை வந்து ஸேவிக்க, ஆண்டானும் முன்புபோலே இவரைக்கொண்டு வேண்டும்கைங்கரியங் களைக் கொள்ள. அப்போது எம்பாருமறிந்து ஆண்டான் பக்கலிலே யெழுந்தருளி கனக்க அபசாரப்பட்டேன், என்றருளிச்செய்ய, இவருடைய திருவுள்ளத்தில் க்லேசத்தை யறிந்து அப்போது ஆண்டானருளிச் செய்த வார்த்தை—'ஒரு கிணற்றிலே விழுந்தவனுக்கு இரண்டுபேர் கைகொடுத்தால், எடுக்குமவர்களுக்கும் எளிதாய் ஏறுமவனுக்கும் எளிதாயிருக்குமிறே; அப்படியே யாகிறது என்றும். இங்குக் கைகொடுப்பதாவது ஞானமளிப்பது இதற்காகவே இந்த ஸம்வாதம் இங்குக் காட்டப்பட்டது. ஸம்ஸார ஸாகரத்தில் அழுந்தினவர்களுக்கு, இரண்டு ஆசாரியர்களாகவிருந்து ஞானக்கை கொடுப்பது நன்றுதானே என்பது முதலியாண்டானுடைய திருவுள்ளம்.

ஆரியர்களே! விஷயம் புரிந்ததா? எம்பாரை அநுவர்த்தித்திருந்த சிஷ்யப் பிள்ளை முதலியாண்டானிடம் சென்றவாறே ஐயோ! இவன் என்னை விட்டிட்டுப்போய் விட்டானே!' என்று எம்பார் கரையவில்லை; ஆண்டானும் 'என்சிஷ்யனை எப்படி நீர் அடிமைகொண்டீர்?' என்று எம்பாரைச் சீறியருள வில்லை கிணற்றில் விழுந்தவனைக் கை கொடுத்துத் தூக்குகிற கதையை ஸ்வர்ணம் ஸ்வாமி அறிந்திருக்க மாட்டாரா? திருக்குடந்தையில் அம்மாஸத்ரம் சேஷாசாரியர் ஸ்வாமி யென்பவர் தம்மிடத்தில் சக்ராங்கனம் செய்துகொண்டு அத்ருஷ்டார்த்தமும்செய்துகொள்ளுகிறவர்களுக்கே உணவளித்து காவ்ய ஶாஸ்த்ர பாடாதிகள் கற்பிப்பதென்று மிகவும் திடமான விரதம் வைத்துக்கொண்டிருந்தார்; அப்படி ஏதேனும் ஸ்வர்ணம் ஸ்வாமி விரதம் கொண்டிருந்தாரோ? ''என்னை விட்டுப் போவதில்லை யென்று சபதம் செய்து கொடுத்தாலொழிய உம்மை நான் சேர்த்துக்கொள்வதில்லை யென்று சபதம் செய்து கொடுத்தாலொழிய உம்மைநான் சேர்த்துக்கொள்ள மாட்டேன்'' என்று ஸ்வர்ணம்ஸ்வாமி ஸாதிக்க, இஞ்சிமேட்டு ஸ்வாமி அப்படியே சபதம் செய்து கொடுத்து ஆச்ரயித்தார் என்று உலகமறிந்து கொள்ளும் படியாகவன்றோ நிச்சங்கமாக எழுதியுள்ளார். ஸ்வர்

ணம் ஸ்வாமி அந்தவிதமாக ஸாதித்திருந்தால் இஞ்சிமேட்டு ஸ்வாமி ஒரு க்ஷணமும் அங்கே தங்கியிருந்திருக்க மாட்டார் என்று அடியேன் திண்ணமாகச் சொல்லுவேன்.

கீழே ப்ரஸ்தாவித்த திருக்குடந்தை அம்மாஸத்ரம் ஸ்வாமி தம்மிடம் சக்ராங்கனம் செய்து கொள்ளாதவர்களைத் தாம் ஆதரிப்பதில்லையென்று விரதங் கொண்டிருந்த காலத்தில் அவரிடத்தில் ஒருவர் வந்து சேர்ந்தாராம்; அவரும் சக்ராங்கனம் செய்துகொள்ள இசைந்து, ஸுதர்சன ஹோமமும் முடிந்து, ஆசார்ய ஸ்வாமி இவருடைய தோளிலே திருவிலச்சினை செய்யப்புக, அவர் வயிற்றைக் காட்டி 'இங்கே பண்ணும்' என்றாராம். அதென்ன? என்றாராம் ஸ்வாமி. 'உஜ்ஜீவனத்திற்காக ஆகவேண்டிய இலச்சினை முன்னமே தோளிலாயிற்று; இப்போது ஆகிற சக்ராங்கனம் வயிற்றுக்காகத்தானே; ஆகவே வயிற்றில் தானே அதுபண்ணவேணும்;'' என்றாராம். வெட்கமடைந்த அம்மாஸத்ரம் ஸ்வாமி அதுமுதலாக அந்த விரதத்தை விட்டிட்டாராம். ஸ்வர்ணம் ஸ்வாமி ''பிறகு என்னை விட்டிட்டு அங்கே போய்விட்டீராகில்...'' என்று ஸாதித்தது உண்மையாயிருந்தால் இஞ்சிமேட்டுஸ்வாமி உடனே அகன்றிருப்பரென்பதில் ஐயமில்லை.

## ஸ்ரீஸ்வாமியின் பூர்வாச்ரமத்திலும் உத்தராச்ரமத்திலும் நிகழ்ந்த இரு சர்ச்சைகள்.

ஸ்ரீ உ. வே. வித்வான் எசனூர். ரங்கஸாமி ஐயங்காரென்பவர் ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியில் ரஹஸ்யங்கள் காலக்ஷேபம் செய்வதற்கென்றே காஞ்சியில் நியதவாஸமாக வந்து சேர்ந்து அடியேனுடைய வீதியிலேயே பல ஸம்வத்ஸரங்கள் எழுந்தருளியிருந்தார். பரமஸாத்விகர். ஆசார்யபக்தியே வடிவெடுத்தவர். ஸாங்கவேதாத்யாயீ. அடியேனுடைய பாடசாலையில் ஒரு ஸம்வத்ஸரம் வேதோபாத்யாயராகவுமிருந்தார். அவர் மற்றுஞ்சிலருடன் ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியிலே ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார காலக்ஷேபம்பண்ண அது உபக்ரமித்து நடந்துவருகிறது. அதில் ஸித்தோபாயசோதநாதிகாரத்தில் ''ஸர்வேச்வரனுக்கு ஸ்ரீமச்சப்தத்திலே சொல்லுகிற பத்நீஸம்பந்தத்தில் வரும் கலக்கங்களுக்கு திங்மாத்ரத்தாலே பரிஹாரங் கட்டுகிறோம்'' என்று தொடங்கி ''சிலர் த்வயத்தில் பூர்வகண்டத்தில் ஸ்ரீமச்சப்தம் உபலக்ஷணபரமென்றும், உத்தர கண்டத்தில் ஸ்ரீமச்சப்தம் விசேஷணபரமென்றும் பிரியச் சொன்னார்கள்; இவ்விடத்தில் சப்தம் ஏகரூபமாயிருக்க, ஸ்வாரஸ்யத்துக்கு பாதகமுமன்றிக்கே யிருக்க *ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத இதம்* இத்யாதிகளிலே ப்ரஸித்தமான கூடஸ்த ஸம்ப்ரதாயத்துக்கு விருத்தமாகப் பண்ணுகிற இவ்விபாகம் அநுபபந்நம்'' என்னுமிடம் (காலக்ஷேபத்தில்) ப்ராப்தமானபோது ஸ்ரீஸ்வாமிக்குத் திருவுள்ளத்திலே தெளிவின்றிக்கே யிருந்ததனால் நாலைந்து நாள் காலக்ஷேப விச்ராந்தியுமாகியிருந்தது. அப்போது ஒருநாள் அடியேனைச் சந்தித்து—(இது க்ருஹஸ்தாச்ரம வ்ருத்தாந்தமென்பது நினைவிருக்கவேணும்) ''உங்களுடைய ஸம்ப்ரதாய க்ரந்தங்களில் த்வயபூர்வகண்டஸ்த ஸ்ரீமச்சப்தத்திற்கு உபலக்ஷண பரத்வவாதம் உள்ளவிடம் நினைவிருக்கிறதா? சொல்ல முடியுமா?'' என்று வினவியருளினர்; ''தென்னாசார்ய ஸம்ப்ரதாய க்ரந்த மொன்றிலும் இந்த உபலக்ஷணபரத்வ—விசேஷணபரத்வ சர்ச்சாலேசமும் கிடையாது'' என்று விஜ்ஞாபித்து, த்வயார்த்த விசாரமுள்ள ஸகல க்ரந்தங்களையும் ஸ்ரீஸ்வாமி ஸன்னிதிக்கு அனுப்பினேன்.

பிறகு நடந்ததென்னவென்றால், ஸன்னிதிவீதியில் பெருங்சட்நீர் சண்டாவ தாராசாரியர் ஸ்வாமியென்கிற வையாகரணர் ஸ்ரீஸ்வாமிக்குப் பரமாப்தர்; அடியே னுக்கும் ஆப்தரே. இவ்விஷயத்தை ஸ்ரீஸ்வாமி அவரிடத்தில் சர்ச்சிக்கத் தொடங்கி னார். க்ரமேண இந்த சர்ச்சையில் வடகலை வித்வான்கள் பலர் கலந்துகொண்டார் கள். அப்போது வித்வான்களுக்கு ஸுபிக்ஷமான காலம். தேவப்பெருமாளுடைய திருவீதிப் புறப்பாடுகளில் பெரும்பாலும் இந்த சர்ச்சையே வலுத்திருந்தது. என்ன முடிவாயிற்றென்பது நினைவில்லை. ஆனால், முடிவான விஷயத்தை ஸ்ரீ ஸ்வாமி உத்தமாச்ரமஸ்வீகாரம் பண்ணி ஸ்ரீமத் அழகியசிங்கராஸ்தானத்தை அலங்கரித்தரு ளின பின்பு ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸார வியாக்கியானமாகத் தாமருளிச்செய்த ஸாரபோ தினியில் உலகமறியப் பொறித்துவைத்தருளியுள்ளார். அந்த ஸாரபோதிநீ வியாக்கி யானம் இரண்டு ஸம்புடமாகப் பதிப்பிக்கப்பட்டு வெளிவந்துஉளது.

இரண்டாவது ஸம்புடத்தில் பக்கம் 29ல்—"இந்த விசேஷணத்வ உபலக்ஷ ணத்வங்கள் ஜந்மாத்யதிகரண ஸ்ரீபாஷ்யத்தில் சொல்லப்பட்டதுகள்; இந்த உப லக்ஷணத்வத்தை ப்ரக்ருதத்தில் பிராட்டி விஷயத்திலே ஏகதேசிகளும் சொல்லுகிறார்க ளில்லை. சொல்லவும் முடியாது." என்று தம் முடைய ப்ராமாணிக ஸார்வபௌமத்வத் தைக் காட்டிக்கொண்டு நிர்தாக்ஷிண்யமாகவும் நிர்ப்பயமாகவும் ஸ்வஹஸ்தேனைவ எழுதி அச்சிட்டு வெளியிட்டருளியாயிற்று இது அடியேன் இந்திரஜாலமாகக் காட்டு வதன்று. ஸ்வாமியின் வியாக்கியான ஸ்ரீகோசம் எங்கும் மலிந்துள்ளது; ஒவ்வொரு வரும் எடுத்து ஸேவிக்கலாம். "இந்த உபலக்ஷணபரத்வ விசேஷண பரத்வங்களை ஏகதேசிகளும் சொல்லுகிறார்களில்லை; சொல்லவும் முடியாது" என்று வெட்டொன்று துண்டிரண்டாகத் துணிந்தெழுதியிருப்பதானது பூர்வாச்ரமத்தில் அடியேன் விஜ்ஞா பித்ததில் பஹுமானதிசயத்தாலே யென்பதை ஸபதம்பண்ணிச் சொல்லவல்லேன் பூர்வாச்ரமத்தில் இந்த சர்ச்சை நடந்தபோது, யாத்ருச்சிகமாக மைஸூரிலிருந்து மஹா வித்வான்களான ஸ்ரீபரகாலமடம் ஆஸ்தான வித்வானான ஆத்மகூர் தீக்ஷாசார்யஸ்வா மியும், மஹாவித்வான் மண்டயம் தேவசிகாமணிராமாநுஜாசார்யஸ்வாமியும் காஞ்சிக்கு எழுந்தருளியிருந்தார்கள். "இது ஆரோப்ய தூஷணமே" என்பது பேர்க்கவும் பேரா தபடி ஸ்திரீக்ருதமாயிற்று. இப்போதுள்ள வித்வான்கள் ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகிய சிங்கர் எழுதியுள்ளதற்கு ஏதாவது தாத்பர்ய கல்பனம் பண்ணுகிறார்களா? அல்லது, எமக்கு அநாதரணீயமென்கிறார்களா? என்பது தெரியவேணும். இப்போது ப்ரியாவில் அச்சிடப்பட்டுவருகிற ஸ்ரீஸ்வாமி வைபவம் பூர்த்தியாவதற்குள்ளே இதுதன்னிலேயே வெளிவந்தால் உலகமெல்லாம் தெளிவுபெறும். கூடஸ்தஸம்ப்ரதாயமென்று ஒன்று எழுதிவைத்திருக்கிறாரே, அது என்ன? என்பதும் விசதமாகவேணும். சதுச்ச்லோகீ பாஷ்யத்திலே *ஸபத்நீகஸ்ய ஸாம்ராஜ்யம் ஸர்வதா ஸுப்ரதிஷ்டிதம்* என்றுள்ள அப்ரதிஹத ஸ்வஸித்தாந்தத்திற்கு முரணாக தேசிகனை ஸாதிப்பவர்; விபுத்வமோ ஜகத்காரணத்வமோ மோக்ஷப்ரதத்வமோ ஸபத்நீகனான ஸர்வேச்வரனுக்குச் சொல்ல வேணுமேயொழிய, கேவல லக்ஷ்மிக்கும் ப்ரஹ்மசாரி நாராயணனுக்கும் சொல்ல லாகாது என்று கல்வெட்டுச் செய்திருப்பதைச் சிறிதும் குறிக்கொள்ளாதே வாத விவாதங்களை வளர்த்திப் போருவது அத்யந்த சோசநீயமென்று தேவனார்விளாகம் அழகியசிங்கர் அடிக்கடி பணிக்கும்படி. ஸ்ரீஸ்துதியிலுள்ள ச்லோகங்களையும், யாத

வாப்புதயத்தில் ருக்மிணிப் பிராட்டியைப்பற்றின சுலோகங்களையுங் காணக் கண்ணில்லையேயென்று ஸ்ரீமந் கோஷ்டீபுரம் ஸ்வாமி பணிக்கும்படி. *யத்ஸங்கல்பாத் பவதி கமலே!* இத்யாதி ச்லோகத்தைமாற்றி *ஜந்மஸ்தேம ப்ரலயரசநாம் இந்திரே! த்வம் கரோஷி* என்று படிப்பாரில்லையே! என்பர் வண்சடகோபஸ்வாமி.

'தாம் வியாக்கியானிக்க எடுத்துக்கொண்ட நூலுக்குத் தாமே அஸாமஞ்ஜஸ்யத்தை நிரூபித்தால் நன்றுயிராதே. பழிப்பாகுமே' என்றெண்ணின இஞ்சிமேட்டழகிய சிங்கர் அந்த உபலக்ஷணபரத்வ—விசேஷணபரத்வங்களை ஒருவாறு நிர்வஹித்தார். (அதாவது) த்வயபூர்வகண்டத்தில் ஸ்ரீமந்நாராயண பாதாரவிந்த ப்ரபதநம் சொல்லப் படுகிற தென்றும், உத்தரகண்டத்தில் தத்ஸந்நிதியில் கைங்கர்ய ப்ரார்த்தனை செய்யப்படுகிறதென்றும் ஸகல பூர்வாசார்ய ஸம்மதமான நிர்வாஹம்; இதில் பூர்வகண்டப்ரமேயமான ப்ரபதநத்தில்மட்டும் பிராட்டிக்கு அந்வயமில்லையென்றும், உத்தர கண்ட ப்ரமேயமான கைங்கர்ய ப்ரதிஸம்பந்தித்வத்தில் மட்டுமே பிராட்டிக்கும் ஸாஹித்யமுண்டென்றும் சொல்லுகிற ஆசார்யர்களின் பக்ஷத்தைக் கண்டித்தருளினதாக நிரூபித்துநிகமித்தருளினர் ஸ்ரீஇஞ்சிமேட்டழகியசிங்கர். அங்ஙனே சொல்லுகிற ஆசாரியர்கள் ஸ்ரீலோகாசார்யாதிகள் மட்டுமல்லர்; பந்துறமுன்னம் ரஹஸ்யார்த்தங்களை ச்லோக பத்தமாக்கி அஷ்டச்லோகியருளிச்செய்த பட்டருமாவர். அந்த அஷ்டச்லோகியில் *ஈசாநாம் ஜகதாம் அதீசதயிதாம் நித்யாநபேதாம் ச்ரியம் ஸம்ச்ரித்ய, ஆச்ரயணேசிதாகிலகுணஸ்ய அங்க்ரீ ஹரேராச்ரயே, இஷ்டோபாயதயா* என்று பூர்வகண்டார்த்தத்தை ஸாதித்துத் தலைக்கட்டி, அதன்பிறகு,* ச்ரியா ச ஸஹிதாயாத்மேச்வரார்த்தயே கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மம:* என்றருளிச் செய்துள்ளார். பூர்வகண்டார்த்த ப்ரபதநத்தில் ஸ்ரீஸாஹித்ய வர்ஜநமும், உத்தர கண்டார்த்த கைங்கர்யயோகத்தில் ஸ்ரீஸாஹித்யமும் ஸுஸ்பஷ்டமாக இங்கு ஸாதிக்கப்பட்டுளது. இந்த விஷயம் தேசிகனுக்கு அத்யந்தம் அநபிமதம் என்பதை யறிந்து இஞ்சிமேட்டு ஸ்வாமி உரை செய்து முடித்தார். இவ்வண்ணமன்றி வேறுவிதமாக ஒருவராலும் வியாக்கியனிக்க முடியாது. பட்டருடைய ஸ்ரீஸூக்தியும் தேசிகனுக்கு விஷமாயிற்றந்தோ! இல்லையில்லையென்னுமவர்கள் நின்று நிரூபித்தருள்க.

இதம் அவதேயம். ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகியசிங்கர் ஸ்வாமி திருவெவ்வுளூரில் எழுந்தருளியிருந்து ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்திற்கு வியாக்கியானம் ஸாதித்தருளாநிற்கையில், (திவம் கதரான) முத்ர கர்த்தா. பழவேரி கிருஷ்ணமாசாரியரை ஒருநாள் இவ்விடமனுப்பி அடியேனை உடனே அழைத்துவரும்படியாக நியமனமாயிற்று. மஹாநுக்ரஹமென்று விடைகொண்டேன். அப்போது நடந்துகொண்டிருந்த நித்ய காலக்ஷேபத்தையும் வ்யாக்யான லேகனத்திற்காக நிறுத்தியிருந்தபடி. ஸ்ரீஸ்வாமி தாம்மட்டுமெழுந்தருளி யிருப்பதோரிடவகையில் அடியேனையழைத்துக் குசலப்ரச்நாதிகள் செய்தருளியானபிறகு, "ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில் *மத்யோபஹதபாத்ரஸ்த தீர்த்த த்ருஷ்டாந்தவர்ணநம்* இத்யாதி காரிகை தேவரீருக்கும் தெரிந்திருக்குமே; பூருவர்களின் வியாக்கியானத்தில் மதிராபிந்துமிச்ரமான சாதகும்பமய கும்பகத தீர்த்தஸலிலம்போலே அஹங்காரமிச்ரமான உபாயாந்தரம்* என்கிற வாக்யம் காட்டப்பட்டிருக்கிறது; இது எங்குள்ளது, யாருடையது? தெரியுமா? ஸாதிக்கமுடியுமா?' என்று கேட்டருளியாயிற்று. 'இது ஸ்ரீவசனபூஷணத்தில் (2) ப்ராபகாந்தரபரித்யாகப்ரகரணத்தில் "திருக்குருகைப்பிரான் பிள்

ளான் பணிக்கும்படி'' என்கிற சீர்ஷிகையுடன் உதாஹரிக்கப்பட்டுள்ளது—என்று விஜ்ஞாபித்து அந்த ஸ்ரீகோசத்தையும் எடுத்து வரச்செய்து அம்ஶதுள்ளவிடத்தையும் எடுத்துக் காட்டினேன். அழகியசிங்கர் இரண்டுமூன்று நாழிகையளவு பராமர்சித் தருளியாயிற்று. இது பிள்ளான் ஸ்ரீஸூக்திக்குக் கண்டனமேயென்பதைத் திருவுள்ளம் பற்றியாயிற்று. ஒருக்கால் பிள்ளான் ஸ்ரீஸூக்தி யென்பதை மறந்து, லோகாசார்யருடைய ஸ்ரீஸூக்தியேயென்றெண்ணி காரிகைஸாதித்திருக்கலாமோ!—என்று பலபடியாக ஸாதித்தாயிற்று. ''அனுலும் ஒருவிதமாக வியாக்கியான மெழுதிவிடுகிறேன்'' என்று ஸாதித்தருளி அடியேனுக்கு விடை தந்தருளியாயிற்று. வியாக்கியானம் ஸாதித்திருக்கிறபடியை யாவரும் ஸேவிக்கலாமே. ஷை ஸாரபோதிநியில் (2) பக்கம் 494ல்—''சிலர் *மதிராபிந்துமிச்ரமரன சாதகும்பமயகும்பகததீர்த்த ஸலிலம்போலே அஹங்கார மிச்ரமான உபாயாந்தரம்* என்கிற பிள்ளான் வாக்யத்தைக் கொண்டு, பக்திஅஹங்கார கர்ப்பமாகையால் ஸ்வரூபவிருத்த மென்பர்கள்; அது அநுபபந்நம்...'' இத்யாதி யெழுதி அச்சிடப்பட்டுள்ளது. உண்மையில் இது வெகு சாதுர்யமான வாக்யரசனை. 'பிள்ளான் ஸூக்தியைக் கண்டிக்கிருர்' என்று வ்யக்தமாகக் காட்டாமல் ''பிள்ளான் வாக்யத்தைக் கொண்டு'' என்கிருர். 'பிள்ளான் அப்படி ஸாதித் திருக்கமாட்டார்' என்ருே, 'பிள்ளான் ஸூக்திக்கு அப்படி அர்த்தமன்று' என்ருே எழுதியிருக்க வேண்டாவா? ''பிள்ளான் வாக்யத்தைக் கொண்டு'' என்ருல் என்னே?

இங்கு ஸாரமான விஷயம் கேளீர்; *மத்யோபஹத பாத்ரஸ்த......* இத்யாதி காரிகையானது—மதிராபிந்து மிச்ரமான.........இத்யாதி ஸூக்தியின் உட்கருத்தையறிந்து செய்ததன்று. கெளுங்கள்; பிள்ளான் வாக்யத்தில் (மதிராமிச்ரமான) என்றில்லை, வெறும் பாத்ரம் என்னவுமில்லை (மதிராபிந்து) என்றதும் (சாதகும்பமயகும்ப) என்றதுமே அங்கு உயிரானது=மத்யபிந்துஹதஸ்வர்ணபாத்ர தீர்த்த நிதர்சநம்—என்னவேணும். பிள்ளான் மண்ணுலான கள்ளுக் குடத்தைச் சொல்லவில்லை. ஸ்வர்ணபாத்ரத்தைச் சொன்ஞர்; வெறும் ஸுவர்ணபாத்ரமன்று; கங்காதீர்த்த பரிபூர்ணமான ஸ்வர்ண பாத் ம். அதில் ஒரு சிறு திவலையளவான மத்யம் கலசிற்று; தார்ஷ்டாந்திகத்தில் விவக்ஷிதம் என்னவென்ருல், ஸத்குண ஸம்பந்நனுன உத்தமாதிகாரி ஸாத்விகத்யாகம் பண்ணி அஹங்காரராஹித்யத்தைக் காட்டிக்கொண்டாலும் வஸ்து ஸ்வாபாவ்யாத் அஹங்கார லவலேசம் காட்டியே தீரும். அதனுல் ஹேயமாகியே தீரும். என்பதைக் காட்டவே (பிந்து) பதப்ரயோகம் பண்ணிற்று. கிம்பஹுநா? உபாயாந்தரத்தின் ஹேயத்வத்தை ஸ்வாமி தேசிகன் தாமும் இசைந்தருளியேயாயிற்று. எங்கே யென்னில்; ந்யாஸதிலகத்தில் *ஆர்த்தேஷ்வாசுடலா* என்கிற ச்லோகத்தில் ப்ரபத்திக்கு ஐந்து விசேஷணங்கள் ஸாதிக்கிருர். ஒவ்வொரு விசேஷணமும் உபாயாந்தரத்திற்காட்டில் ப்ரபத்தியின் வைலக்ஷண்யத்தை விளக்குமது. (1) ஆர்த்தப்ரபந்ந விஷயத்தில் அவிலம்பேந பலப்ரதானம் பண்ணும்ப்ரபத்தி; உபாயாந்தரம்விலம்பித்துப் பலனளிக்கும். (2 த்ருப்தப்ரபன்னன்}விஷயத்தில் தேஹாந்தர ஸங்கத்தை யறுத்துத்தரும் ப்ரபத்தி; அது தாராது. (3) ப்ரபத்தி ஸர்வாதிகாரம்; அது அதிக்ருதாதிகாரம். (4) ப்ரபத்தி [யாவதாத்மநியதத்வத்பாரதந்த்ர்யோசிதா] ஸ்வரூபாநுரூபம்; அது ஸ்வரூபவிருத்தம். (*பத்தி முதலாமவற்றில் பதியெனக்குக் கூடாமல்* என்று சொல்லுவிக்கும். (5) தன்னை உபாயமென்ன ஸஹியாது ப்ரபத்தி; அது ஸஹிக்கும். இது நாம் ஏறிட்டுரைப்பதன்று; அக்ஷரலப்யமானதே. ''ஸ்வாதிகாரவிருத்த மென்ன ப்ராப்தம்'' என்று ஸாரத்தில் ஸ்பஷ்டமாக வருளிச்செய்துமுள்ளார்.

ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையில் இப்போது வெளிவந்துகொண்டிருக்கிற ஸ்ரீமத் பரமஹம்ஸ. இஞ்சிமேட்டழகிய சிங்கர்வைபவம் இப்போது புதிதாக எழுதப்படுவதன்று என்றும், ஏற்கனவே நந்தன வருஷத்தில் (1953ல்) அச்சிடப் பட்ட [ஸ்ரீஸ்வாமிவைபவஸுதா] என்னும் நூலிலுள்ள தமிழ்வசனங்களை அப்படியப்படியே கொண்டு அச்சிட்டாகிற தென்றும் ஆப்ததமரான ஒரு மஹாஸ்வாமியால் இன்று (5-3-78ல்) தெரியவந்தது. அடியேனுக்குப் பரம ஸுஹ்ருந்மணியும் வித்வத்வரேண்யரும் விசேஷித்து கௌரவிக்கத் தக்கவரு மான ஸ்ரீமதுபயவே. பாதூர். ராகவாசாரியர் ஸ்வாமிதாம் அந்த வைபவஸுதா ப்ரணேதா வென்பதையும் தெரிந்து கொண்டேன். அந்தஸ்வாமி, இதுவரை அடியேன் இங்கு எழுதியிருப்பதைக் கடாக்ஷித்தால் சிறிது வருந்துவர். இங்கு அடியேனுடைய விண்ணப்பத்தை உலகம் குறிக்கொள்ளவேணும். தை அமாவாஸ்யைக்கு ஸ்ரீமுஷ்ணம் ஸ்வாமியோடு இஞ்சிமேடுஸ்வாமி பூர்வாச்ர மத்தில் திருநாங்கூருக் கெழுந்தருளினகாலத்தில் நம் பாதூர் ராகவாசார்ய ஸ்வாமி ஜனித்தவரேயல்லர்; ஜனித்திருந்தாலும் சிசுப்ராயத்திலிருந்தவர் என்று நான் சபதம் பண்ணுவேன். ஸ்ரீபெரும்பூதூர் மஹாவித்வான் குண்ட லம்ஸ்வாமி திருநாங்கூருக்கு எழுந்தருளினவரல்லர் என்பதையும் சபதமிட்டுச் சொல்லுவேன். குண்டலம் ஸ்வாமிக்கு இரு திருக்குமாரர்கள். அவ்விருவரும் ஸ்ரீபெரும்பூதூர்ப் புஷ்கரிணியில் (வர்ஷபேதேந) சருக்கிவிழுந்து ஆசாரியன் திருவடிசார்ந்ததனால் (த்விதீயகுமார மரணம் அந்த தையமாவாஸ்யா ஸமயத் திற்குச் சிலநாள் முன்னேயென்பது பலஹேதுவிசேஷங்களினால் அடியேனு டைய த்ருடஸ்மரணத்திலிருப்பதனால்) திருநாங்கூரில் அந்த ஸ்வாமியோடு வாக்யார்த்தம் நடந்ததாகச் சொல்வது அத்யந்தம் அதிதராம் அபத்தம். ஸ்ரீபெரும்பூதூர் விஷயம் கீழே அடியேன் தெரிவித்திருப்பது இஞ்சிமேட்டழ கிய சிங்கர் சோதிவாய் திறந்து ஸாதிக்க நான் கேட்டது. ஆநந்தமயாதி கரணத்தில் வாக்யார்த்தம் என்று எழுதப்படுகிறது. சீர்காழியருகே கடைவாச லென்னுமூரில் தொட்டயாசார்ய ஸ்வாமி யென்பாரொருவர் ஸ்ரீபெரும்பூதூரில் குண்டலம்ஸ்வாமி ஸந்நிதியில் ஸாமாந்யசாஸ்த்ரங்களதிகரித்து ஆஸூரி ஸ்வாமிஸன்னிதியில் ஸ்ரீபாஷ்யம் ஸேவித்து ஸம்ந்யஸித்துமிருந்தார். ஒரு ஸமயம் அவரோடு இஞ்சிமேட்டழகிய சிங்கர் ஸ்ரீபாஷ்ய சர்ச்சை செய்தருளின ரென்று கேள்விபுண்டு. இதெல்லாம் பாதூர் ராகவாசார்யஸ்வாமிக்கு நேராகத் தெரிந்திருக்க ப்ரஸக்தியேகிடையாது. ஸ்ரீஸ்வாமி ஸாதிக்கக் கேட்டு எழுதி னேன் என்று ஸாதிக்கக்கூடும். அதை அடியேன்மனம் நம்பவில்லை, நம்ப மாட்டாது. இந்த வைபவ ஸுதாக்ரந்தத்தில் இஞ்சிமேட்டழகிய சிங்கர் திரு நாடலங்கரித்த செய்தியும் எழுதப்பட்டிருப்பதால் இதை ஸ்ரீஸ்வாமி கடாக்ஷித் தருளவில்லையென்பது ஸ்பஷ்டமாகிறது. கடாக்ஷித்தருள நேர்ந்திருந்தால் பொய்புரைகளும் அஸம்பாவிதோக்திகளும் விலக்கப்பட்டேயிருக்கும் முக்கி யமாக, இஞ்சிமேட்டுஸ்வாமி பூர்வாச்ரமத்தில் பலஸபைகளில் வெற்றிபெற்றி ருந்ததை வைபவஸுதாவில் சிறிதும் ப்ரஸ்தாவியாமையும் இதற்குப் பெருத்த குறை ஸ்ரீபாதூர்ஸ்வாமிபரமப்ராமாணிகரென்பதில்ஐயமில்லை.தேவோ ஜாநாதி.

**உபஸம்ஹாரம்** — ஆரியர்காள்! ஸ்ரீமத் இஞ்சிமேட்ட அழகிய சிங்கரைப் பற்றி இதுவரை எழுதியது போதுமென்று நிறுத்திக்கொள்ளுகிறேன். அந்த ஸ்வாமி திருப்பதியில் வித்யாப்யாஸத்தை முடித்துக்கொண்டு தென்திசைக்கு எழுந்தருளிய பின் கடந்துபோன வருஷங்கள் ஏறக்குறைய 72 எழுபத்திரண்டு. ஸ்ரீஸ்வாமி ஸ்ரீமுஷ்ணத்தைவிட்டுக் காஞ்சீபுரத்தில் ஸ்திரவாஸமாக வந்து சேர்ந்தது முதல் ஆச்ரம ஸ்வீகாரம் செய்தருளுமளவும் ஸ்ரீஸ்வாமியோடு இடைவிடாமல் நெருங்கிப் பழகிவந்தவன் (இப்போது ஜீவித்திருப்பவர்களில்) அடியேனொருவனே யுளனென்பதை யாரும் மறுக்க முடியாது. திருநாங்கூர் ஸ்ரீபெரும்பூதூர் வரலாறுகள் அடியேனுள்ளமறிந்தபடி ஆறுவளவும் மாறுபாடின்றியே வரையப்பட்டுள்ளன. அதில் வீணான வாதவிவாதங்கள் வளர வேண்டா. வளர்வது விரஸம். ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி: என்று நிற்கிறேன்.

## தேவப்பெருமாள் ஸந்நிதி திருக்கோபுர ஜீர்ணோத்தாரண ஸம்ப்ரோக்ஷணம்

ஒன்றரை ஸம்வத்ஸரகாலமாகத் தேவப்பெருமாள் ஸந்நிதி மேலண்டை கோபுரம் ஜீர்ணோத்தாரணம் செய்யபட்டுவருஞ் செய்தியும், அது காரணமாக எல்லாவித மஹோத்ஸவங்களும் ஸந்நிதிக்குள்ளேயே நடத்தப்பட்டு வருகின்றன வென்பதும், பழையசீவரம் பரிவேட்டை யுத்ஸவம், தென்னேரித் தெப்பவுத்ஸவம், ராய்ஜீகுளத் தெப்பவுத்ஸவம், ஐயங்கார்குளத்துத்ஸவம் இவை அறவே நிறுத்தப்பட்டிருந்தன வென்பதும் நாடுநகரமும் நன்கறிந்ததே. ஒன்றரை வருஷமாக நடந்துவந்த கோபுரத் திருப்பணி ஒருவாறு நிறைவேறிவிட்டபடியால் நாளது பங்குனிமீ 30உ (12-4-78) புதன்கிழமை ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம் நடத்த தேவஸ்தானதிகாரிகளால் நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. ... ... ... ●

## வித்வந்மணியைச் சிறப்பித்தல்

உத்தரமேரூரில் வாழும் ஸ்ரீமதுபயவே வித்வான். V.வாஸுதேவாசார்ய ஸ்வாமியை வித்வான்கள் பலரும் நன்கறிந்திருப்பர்கள். இந்த ஸ்வாமி ஸாஹித்யம் வியாகரணம் உபயவேதாந்தம் இவற்றில் தலஸ்பர்சியான ஞானம் பெற்றிருப்பதோடு ப்ரவசனத்திலும் மஹாநிபுணராய் விளங்குபவர். ஸ்ரீமதுராந்தகத்திலுள்ள ஸ்ரீமதஹோபிலமட ஸம்ஸ்க்ருத காலேஜில் பலவாண்டுகளாக வியாகரணோபாத்யாய பதவியையும் அலங்கரித்துவருகிறார். நேற்று மார்கழிமாதத்தில் ஒருநாள் சென்னைக்கு எழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமி புரசைவாக்கத்தில் ஒரு ஸபையில் "திருப்பாவையில் பகவத் ராமாநுஜ மஹிமை" என்பதுபற்றி உபந்யஸித்தபோது நாம் யத்ருச்சயா அங்குச் செல்ல நேர்ந்தது. ஏற்கனவே சிலபல ஸந்தர்ப்பங்களில் இவருடைய ப்ரவசனங்களை நாம் கேட்டு மகிழ்ந்திருந்தாலும், அன்று மிகச்சிறப்பாக அநுபவிக்க ப்ராப்தமாயிற்று. அப்போது ஸபாத்யக்ஷருடைய ப்ரேரணையின்மேல் அப்போது நாம் இந்த ஸ்வாமிக்கு **மதுரார்த்த மஹாநிதி** என்கிற விருது சூட்டினோம். ஸப்யர்கள் கரகோஷத்தினால் ஆமோதித்தார்கள். ... ... ... ●

ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீ: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# காளயுக்தி௵ காஞ்சீ மஹோத்ஸவ விவரணங்கள்

13—4—78 வருஷப் பிறப்பு
17—4—78 ஸ்ரீராமநவமி
21—4 -78 திருவவதார உத்ஸவம்
13-4 to 22-4. மதுரகவிகள் உத்ஸவம்
23—4—78 நடைபாவித்திருநாள்
25—4 —78 தோட்டத்திருநாள்
2-5 to 11-5. உடையவர் உத்ஸவம்
12—5—78 கடைவெள்ளிக்கிழமை
13-5 to 22-5. நம்மாழ்வாருத்ஸவம்
18—5—78 ஆழ்வார் திருநாள்
19-5 to 28-5. வைகாசி உத்ஸவம்
8-6 to 9-6. வஸந்தோத்ஸவம்
7-7 to 13-7. கோடையுத்ஸவம்
14-7. பெரியாழ்வார், ஆனி கருடன்
5-7 to 14-7. வடக்குத் திருவீதிப்பிள்ளையுத்ஸவம்
7-7 to 16-7. ஸ்ரீமந்நாதமுனிகளுத்ஸவம்
20-7-78 கஜேந்திரமோக்ஷம்—ஆடிகருடன்
29-7 to 7-8. திருவாடிப்பூரமஹோத்ஸவம்
16—8 -78 ஆளவந்தார்
23—8—78 ஸ்ரீஜயந்தி
27—8—78 உறியடி
16-9 to 22-9 பவித்ரோத்ஸவம்
10—10 —78 மஹாநவமி
2-10 to 11-10 நிகமாந்தமஹாகுருத்ஸவம்
11—10 - 78 விஜயதசமி
23-10 to 4-11 மணவாளமாமுனிகளுத்ஸவம்
30—10—78 தீபாவளி
5—11—78 ஸேனாபதியாழ்வான்
29-10 to 7-11. பொய்கையாழ்வார், பிள்ளைலோகாசார்யருத்ஸவம்
8-11, 9-11. பூதத்தார், பேயாழ்வார்
3-12 to 12-12. கலியன் நம்பிள்ளையுத்ஸவம்
13—12—78 திருப்பாணாழ்வார்
14—12—78 திருக்கார்த்திகை

16-12-78 to 18-1-79 மார்கழித்திங்கள்
28—12 78 தொண்டரடிப்பொடிகள்
30-12-78 to 18-1-79 திருவத்யயன உத்ஸவம்
13—1—79 ஆண்டாள் திருக்கல்யாணம்
14-1-79 சங்கராந்தி ஆண்டாளூர்கோலம்
15—1—79 சீவரம் பார்வேட்டை
16—1—79 திருமழிசையாழ்வார்
19—1—79 கூரத்தாழ்வான்
20—1—79 திருப்பல்லாண்டு தொடக்கம்
28 - 1 - 79 வனபோஜன உத்ஸவம்
3—2—79 ரதஸப்தமி
12-2 to 14-2-79 தெப்பவுத்ஸவம்
25-2 to 6-3-79 திருக்கச்சிநம்பிகள் உத்ஸவம்
13—3—79 ராய்ஜிகுளத் தெப்பம்
14-3 to 16-3-79 தவன உத்ஸவம்
18-3 to 24-3-79 பல்லவ உத்ஸவம்
23—3 79 உடையார்பாளையம், யுகாதி
4-4 to 10-4-79 பங்குனி உத்தரவுத்ஸவம்

| திருவிசாகத் தேதிகள் | திருமூலத் தேதிகள் |
|---|---|
| 24—4—78 | 27—4—78 |
| 22—5 | 25—5 |
| 18—6 | 21—6 |
| 15—7 | 18—7 |
| 12—8 | 15—8 |
| 23—9 | 23—9 |
| 5 - 10 | 8 - 10 |
| 2—11 | 5—11 |
| 29—11 | 2—12 |
| 23 12 | 29—12 |
| 23—1 79 | 23—1—79 |
| 19—2 | 22—2 |
| 18—3 | 21—3 |

{ ஸ்ரீராமாநுஜன் வெளியீடு 10—3—78 P. B. A. }

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

**ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதி பயங்கரம்**

# அண்ணங்கராசாரியர் ஸ்வாமியின்

**பிங்கள வருஷத்திய**

# மீன விசாகோத்ஸவப் பத்திரிகை

**ஸ்ரீஸ்வாமியின் எண்பத்தேழாவது திருநக்ஷத்திர பூர்த்தியை முன்னிட்டு**

***ஸ்ரீ காஞ்சியில் ஸ்வாமியின் திருமாளிகையில்***

நாளது பங்குனி௴ **6**௳ (**19-3-78**) ஞாயிற்றுக்கிழமை முதல் பங்குனி௴ **15**௳ (**28-3-78**) செவ்வாய்க்கிழமைவரை

வேதபாராயணம், திவ்யப்ரபந்தஸேவை, ரஹஸ்யாநுஸந்தாநம், ஸ்தோத்ரபாடம், வித்வான்களின் உபந்யாஸம் இவை நடைபெறும். ஆப்தர்கள் அனைவரும் கூடியிருந்து சிறப்பாக நடப்பிக்கும்படி பிரார்த்திக்கப்படுகிறார்கள்.

காஞ்சீபுரம்,
1-3-78.

இங்ஙனம்,
ப்ரதிவாதிபயங்கரம் **செல்வமணி** என்கிற
**ரங்கநாத தாஸன்.**

## கடந்த௵ மீனவிசாக நிகழ்ச்சிக்கு அபிமானிகளின் அன்பளிப்பு

| | |
|---|---|
| ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருக்குறுங்குடி ஜீயர் ஸ்வாமி | ரூ. 25 |
| ஸ்ரீமத்பரமஹம்ஸ திருமலைதிருப்பதி சின்ன ஜீயர் ஸ்வாமி | 101 |
| ஸ்ரீமத்பரமஹம்ஸ ஸ்ரீமன் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி | 101 |
| ஸ்ரீமான் M.ரங்கஸாமி ஐயங்கார் MDS | 101 |
| A. ஸ்ரீனிவாஸ ஐயங்கார் | ,, 101 |
| A. V. கன்னைய நாயுடு | ,, 101 |
| T. S. திருமலாசாரியர் | ,, 25 |
| A. K. சடகோபாசாரியர் | ,, 50 |
| ஸ்ரீ K. V. நரஸிம்ஹன் (Auditor) வகையறுக்கள் | ரூ MDS 167 |
| க்வாளியர் S. ஸத்யமூர்த்தி ஐயங்கார் ஸ்வாமி | ,, 20 |
| C. கிருஷ்ணஸ்வாமி நுங்கம்பாக்கம் | ,, 10 |
| G. V. லக்ஷ்மீநாராயணன் | ,, 25 |
| T. A. திருவேங்கடாசாரியர் | ,, 11 |
| K. M. ராமாநுஜ ஐயங்கார் | ,, 10 |
| M. ஏகாம்பர முதலியார் | ,, 21 |
| V. N, தேவநாதன் | ,, 15 |

| ஸ்ரீமான்கள் | ரூ. |
|---|---|
| V.C. ரங்கதுரை சென்னை | 50 |
| G. V. லக்ஷ்மீவராஹன் ,, | 10 |
| A. ராமஸ்வாமி நாயுடு ,, | 25 |
| தேசூர் ஸ்ரீநிவாஸவரதாசாரியார் ,, | 25 |
| K.S. பார்த்தஸாரதி ஐயங்கார் ,, | 100 |
| R. V. சேஷாத்ரி ஸ்வாமி B.A., B.L., | 25 |
| நாராயணக்கோனர் ,, | 100 |
| அண்ணாமலை நாடார் ,, | 50 |
| P. V. பாண்டுரங்கம் செட்டி ,, | 5 |
| சக்ரபாணி செட்டியார் சைதை ,, | 15 |
| P. G. மாணிக்க செட்டியார் ,, | 10 |
| சென்னை தேவராஜுலு நாயுடு (காய்கறி) | |
| டாக்டர் வெங்கடக்ருஷ்ணய்யா | 15 |
| (அகரம்) R. வரதன் | 100 |
| M. A. க்ருஷ்ணம்மா | 100 |
| R. வரதராஜ ஐயங்கார், ஸ்ரீரங்கம் | 25 |
| H. ஹனுமந்தாச்சாரி | 5 |
| A. சீதாராமன், அசோகநகர் | 30 |
| குடிவாட லலிதம்மா | 5 |
| N. வேணுகோபால நாயகர் | 5 |
| ரங்கநாயகி கொருக்குப்பேட்டை | 15 |
| (Late) K. திருவேங்கடாசாரி அட்வகேட் | 15 |
| திருவாலவட்டம் துரைசாமி | 5 |
| S. அப்பன் ஐயங்கார் (அச்சந்தவிழ்த்தான்) | 10 |
| K.K.A. ஸ்ரீநிவாஸாசாரியர் Bombay | 25 |
| P. A. ஸ்ரீநிவாஸாசாரியர் பெங்களூர் | 75 |
| திண்டுக்கல் ராஜகோபாலன் | 100 |
| ,, தோப்பு ராமராமானுஜர் | 30 |
| Dr. N. ஸ்ரீநிவாஸன் | 20 |
| N. P. ஸ்ரீரங்காசாரியர் | 5 |
| அச்சிறுவாக்கம் முனுசாமிரெட்டியார் | 15 |
| M. செல்லபெருமாள்கோனர் மதுரை | 30 |
| முத்துராமரெட்டியார் ராதாபுரம் | 10 |
| ஸ்ரீமான் பாலக்ருஷ்ண கிள்ளை இளையாண்டபட்டு | 25 |
| K. P. சந்த்ரஹாஸன், ஈரோடு | 5 |
| C. வெங்கடாசலம் ,, | 5 |
| V. எதிராஜன் ,, | 5 |

| ஸ்ரீமான்கள் | ரூ |
|---|---|
| ஜலகண்டபுரம் நாகப்பன் பொன்னுடைகளும் பொற்காணிக்கைகளும் | |
| காரைக்குடி T. R. ராகவ ஐயங்கார் டிரஸ்ட் | 10 |
| களம்பூர் ராமநாதன் செட்டியார் | 87 |
| K. V. ராஜகோபாலன் குத்தாலம் | 50 |
| ஸ்ரீவரதாசாரியர் கான்பூர் | 15 |
| T. பார்த்தஸாரதி ஐயங்கார் காஞ்சீ | 10 |
| A. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் மன்னார்குடி | 25 |
| மண்டகப்பட்டு தேவநாதாசாரியர் | 5 |
| R. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் நேமத்கான்பட்டி | 30 |
| T. V. G. ஆச்சார்ய ஒரிஸ்ஸா | 105 |
| T. V. க்ருஷ்ணஸ்வாமி ஐயங்கார் பேராவூரணி | 5 |
| ராதாபுரம் ரங்கா ரெட்டி | 30 |
| R. ஜகந்நாத ஐயங்கார் பாண்டிசேரி | 11 |
| சேதுராம செட்டியார் ,, | 100 |
| ஸ்ரீவைஷ்ணவரத்னம் D. K. ராஜு ராஜபாளையம் | 250 |
| S. T. சடகோபாசாரியர் ராமநாதபுரம் | 10 |
| கரியமாணிக்கம் ராதாகிருஷ்ணன் | 10 |
| சேரங்குளம் K. R. ராஜகோபால ஐயங்கார் (பட்டு ராஜம்) | 10 |
| காஞ்சீபூர்ண செட்டியார் சேலம் | 10 |
| R. பார்த்தசாரதி ஐயங்கார் ஸ்ரீவில்லிபுத்தூர் | 5 |
| தேவநாத் ஐயங்கார் செகிந்திராபாத் | 20 |
| தென்திருப்பேரை மகரபூஷணமையங்கார் | 20 |
| திருமாணிக்குழி லக்ஷ்மீநாராயணன் | 25 |
| திருப்பத்தூர் காளியப்ப முதலியார் | 50 |
| ,, ஷண்முக முதலியார் | 50 |
| திருச்சி சுந்தரராஜன் செட்டியார் | 50 |
| தூத்துக்குடி கோவிந்தசாமி | 31 |
| விட்டலாபுரம் வெங்கடாசாரியர் | 5 |
| விக்ரவாண்டி திருநாராயணபாகவதர் | 25 |
| T. S. வாஸன் மதருஸ் | 10 |

# ஸ்ரீ ராமாநுஜ மிஷனின் வார்ஷிகோத்ஸவம்

எம்பெருமானார் தரிசனத்தை வளர்ந்தோங்கச் செய்வதையே குறிக்கோளாகக் கொண்ட ஸ்ரீராமாநுஜமிஷனின் இருபத்து மூன்றாவது வார்ஷிகோத்ஸவம் திருநாங்கூரில் மார்ச்சுமீ 7-8 தேதிகளில் வெகுசிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. திருநாங்கூர் பன்னிரண்டு கருடஸேவை உத்ஸவம் உலகப் புகழ் படைத்தது. திருமங்கை மன்னன் தாம் விபவத்தில் "தானுகந்த ஊரெல்லாம் தன் தாள் பாடி" என்றும், "உலகமேத்துங் கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று மண்டினார் உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே" என்றும் திருவாய்மலர்ந்தருளியப்ரகாரம் அர்ச்சையையும் தம்முடைய அவதார ஸ்தலத்திற்கு அணித்தாய் அமைந்துள்ள திருவாலியையும், திருநாங்கூர் பதினொரு திவ்ய தேசங்களையும் தாமே எழுந்தருளி மங்களாசாஸநம் செய்தருளும் அழகு எழுத்தாலும், எண்ணத்தாலும் வடிக்க ஒண்ணாதது. வானோர் போற்றும் இந்தத் தை அமாவாஸ்யை மஹோத்ஸவத்தில் ஆண்டு தோறும் ஸ்ரீராமாநுஜ மிஷனின் ப்ரசாரக் கூட்டமும் வித்வத் ஸதஸ்ஸும் நடைபெற்று வருவது அந்த உத்ஸவத்திற்குச் சிரோபூஷணமாக விளங்குகிறது.

ப்ரதி வருஷம் போல் இந்தப் பிங்கள ஸம்வத்ஸரத்திலும் விசேஷ வைபவமாக மிஷனின் கூட்டம் ஸ்ரீவைகுந்த விண்ணகரம் ஸந்நிதியில் இரண்டு நாட்கள் நடந்தது. இந்த வைபவத்தில் பல மஹான்களும் இராமாநுசனடியார்களும் கலந்து கொண்டு சிறப்பித்தனர். முக்கியமாக பேராசிரியர் ஸ்ரீஉவே S. V. வரதராஜய்யங்கார் ஸ்வாமி (திரு வல்லிக்கேணி) கூட்டத்திற்குத் தலைமை தாங்கி ஆழ்வார்களின் ஈரச் சொற்களை வைணவத்திற்குரிய சிறப்பு என்ற விசேஷ உரையாற்றினார். கூட்டத்திற்கு எழுந்தருளியிருந்த "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் ஆசிரியர் ஸ்ரீ உ. வே. P. கிருஷ்ண ஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி தேவதாந்தரங்களின் அவரத்வத்தையும் ஸ்ரீமந் நாராயணனுடைய பரத்வத்தையும் பலபடியாக 'பரிபாடல்' முதலான சங்க இலக்கியங்களின் வாயிலாகவும், இதிஹாஸபுராணாதிகளின் மூலமும் எடுத்துக் கூறி அந்த ஸர்வேச்வரன் ஒருவனையே உபாயமாகவும், உபேயமாகவும் கொண்டுள்ளதே வைணவத்தின் சிறப்பு என்று உபந்யஸித்தார்.

அடியேனும் பெரியோர்களின் ஆணைப்படி "பகவத் கைங்கர்யம்" வைணவத்தின் சிறப்பு என்று பேசுகையில், எம்பெருமான் திருவடிகளில் நாம் செய்யும் கைங்கர்யம் அவன் திருவடிகளில் நம்மைச் சேர்த்து வைக்கும் உபாயம்; அதுவே உபேயமாம் என்ற தத்துவத்தை நம்மாழ்வார் திருவுள்ளம் பற்றினதும் (உற்றேன் உகந்து பணி செய்து உனபாதம் பெற்றேன் ஈதே இன்னம் வேண்டுவது எந்தாய்) திருமங்கை மன்னன் குருகாதிபனின் திருவுள்ளக் கருத்தறிந்து ஆராமஞ் சூழ்ந்த அரங்கநகரப்பனுக்கு கோபுர மண்டபாதிகள் நிர்மாணித்த அழகும், கைங்கர்யமே வடிவெடுத்தும் திருக்கச்சி நம்பிகள் எம்பெருமானார்க்கு அருளாளன் வாயிலாக ஆறு வார்த்தைகள் கடாக்ஷித்தருளி தர்சன ப்ரவர்த்தகரானமையும் நமக்குத் திடமான அத்யவஸாயத்தை விளைவிப்பன என்று கூறி மிஷனில் நாமெல்லோரும் சேர்ந்து உலகெங்கும் சிறந்த வைணவ மதத்தை வளரச் செய்ய முயல்வோமாக என்று சுருக்கமாக விண்ணப்பம் செய்யலாயிற்று. மற்றும் பலர் பேசினர். **கு. அ. தேவராஜ தாஸன்**, சென்னை.

## FORM IV

1. Place of pulication — 29, South Mada St., Kancheepuram-3
2. Periodicity of its publication — Monthly
3. Printer's Name — E. Devarajan
   Whether citizen of India — Indian
   (If foreiner, state the country of origin)/Address — 44-C, T. K. Nambi St.: Kanchipuram-3
4. Publisher's Name (Whether citizen of India?) (If foreigner, state the country of origin) / Address — P. B. Annangaracharya, Indian, 29, South Mada St., Kancihpuram-3.
5. Editor's Name (Whether citizen of India?) (If foreigner, state the country of origin) / Address. — do
6. Name and addresses of individuals who own the newspaper and partners or share holders holding more than one percent of the total capital. — do

I, P. B Annangaracharya, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

*P. B. Annangaracharya,*
Signature of Publisher.

Date: 10—3—78

---

**If un-delivered please return to:**

P. B. ANNANGARACHARYA,
Kanchipuram. Pin Code-631503.

---

**To**
**Sriman/Srimathi**

590. Sri P.A.THIRUVENKATACHARYA,
16, M.M.Sannidhi Street,
SRIPERUMBUDUR 602 105.



---

Edited and Published by P. B. Annangaracharya Swami
and Printed by E. Devarajan at Sri Kamakshi Press.
No. 44-c, Thirukatchinambi Street, Kancheepuram-631503